# மூணு முயல் குட்டிகள்

இவான் கன்டஷேவ்

தமிழில் கிருஷ்ணன்



# மூணு முயல் குட்டிகள்

இவான் கன்டஷேவ்

தமிழில் கிருஷ்ணன்






மூன்று முயல் குட்டிகள் இருந்தனவாம் ஒரு காலத்தில். அது மூன்றும் அம்மா அப்பாவுடன் ஒரு பெரிய பொந்தில் வாழ்ந்து வந்தனவாம்.

ஒரு நாள் அப்பா முயல் தன் மூன்று முயல் குட்டிகளையும் அழைத்து “நீங்கள் மூவரும் இப்போது வளர்ந்து விட்டிர்கள். உலக அனுபவம் பெறுவதற்கான தக்க நேரம் இதுவே. ஆனால் இதை மட்டும் மறந்துடாதீங்க. எங்கே சென்றாலும் முதலில் ஒரு முயல் பொந்தை கட்டி கொள்ளுங்கள்  நரிகளிடம் இருந்து தப்பிக்க” என்றார்.

“ஆமாம்..ஆமாம் ! முதலில் பொந்தை கட்டி ஒளிந்து கொள்வோம் நாங்கள்” என்றன மூன்று முயல் குட்டிகளும்.





பெற்றோரிடம் இருந்து விடை பெற்று கொண்டு உலகத்தை காண உற்சாகமாக சென்றன. “அப்பாடா ! இனி யார் சொல்படியும் கேட்க தேவையில்லை. நம்ம விருப்பத்தின் படி வாழ முடியும்” என்று கர்வத்துடன் சொல்லி கொண்டன.

முதல் முயல் குட்டி தான் வாழ்வதற்கு ஒரு அழகான இடத்தை கண்டுபிடித்தது

“யார் சொல்படியும் நான் இனி கேட்க தேவையில்லை. நான் வாழ்வதற்கு முயல் பொந்து தேவையில்லை. எனக்கு தேவை ஒரு அழகான கூடு அதை கட்டப்போகிறேன்” என்று கூடு கட்ட ஆரம்பித்தது.

முயல் குட்டி கிளைகள், வைக்கோல், செடிகள் போன்றவைகளை சேகரித்து கூடு ஒன்றை கட்டியது. சாப்பிடுவதற்கும், விளையாடுவதற்கு நிறையவே நேரம் கிடைத்தது.



கூட்டிலிருந்து புல்வெளிக்கு வந்து முயல் ஒரு செடியை தின்று கொண்டிருந்தது. யாரோ ஒருவர் அருகில் இருப்பதை உணர்ந்தது. பார்த்தால் பக்கத்திலேயே ஒரு நரி நின்று கொண்டிருந்தது. பசியில் இருந்த நரிக்கு முயலை திங்க வேண்டும் என்ற ஆசை.

“ஐயோ இந்த நரியிடம் இருந்து தப்பிக்க ஒரு பொந்து வேண்டுமே! அது இப்போது இல்லையே, என்னிடம் இருப்பதோ வெறும் கூடு தானே அதில் எப்படி ஒளிந்து கொள்வது” என்று பயத்துடன் நடுங்கியது முயல்.

“கூடு பறவைகளுக்கு தானே தவிர முயலுக்கு அல்லவே.”



“ஏய் முயல் குட்டி எவ்வளவு அழகான நாள் இது. வெளியே வா விளையாடலாம்” என்று தந்திர நரி முயலை அழைத்தது.
நான் வர மாட்டேன் என்று முயல் சொன்னது
“இதோ நான் வந்து உன்னை பிடிக்கிறேன் பார்” என்றது நரி.
நரி ஒரே பாய்ச்சலில் பாய்ந்து முயலை பிடிக்க பார்த்தது. கொர்... கொர்...என்று குறைத்து கொண்டும், மோப்பம் பிடித்து கொண்டும் திரிந்தது.
“அட சே... இந்த முயலை தப்பிக்க விட்டு விட்டோமே!” என்று வருந்தியது நரி.

இரண்டாவது முயல் குட்டியும் ஒரு அழகான இடத்தை கண்டு பிடித்திருந்தது. “ஒரு முயல் பொந்தை கட்டுவதற்கு நிறைய நாள் எடுக்கும். நான் ஒரு குடிலை கட்டி கொள்ள போகிறேன். பிறகு எனக்கு என்ன பிடிக்கிறதோ அதை செய்ய போகிறேன்” என்று சொன்னது முயல் குட்டி. கிளைகள், வைக்கோல், செடிகள் போன்றவைகளை சேகரித்து குடில் ஒன்றை கட்டியது. சாப்பிடுவதற்கும், விளையாடுவதற்கும் நிறையவே நேரம் கிடைத்தது. புல் வெளியில் ஓடி திரிந்தது.





யாரோ ஒருவர் அருகில் இருப்பதை உணர்ந்தது. பார்த்தால் பக்கத்திலேயே ஒரு நரி நின்று கொண்டிருந்தது. பசியில் இருந்த நரிக்கு முயலை திங்க வேண்டும் என்ற ஆசை.
ஐயோ இந்த நரியிடம் இருந்து தப்பிக்க ஒரு பொந்து வேண்டுமே! அது இப்போது இல்லையே, என்னிடம் இருப்பதோ வெறும் குடில் தானே அதில் எப்படி ஒளிந்து கொள்வது என்று பயத்துடன் நடுங்கியது முயல்.

“ஏய் முயல் குட்டி எவ்வளவு அழகான நாள் இது. வெளியே வா விளையாடலாம்” என்று தந்திர நரி முயலை அழைத்தது.
“நான் வர மாட்டேன்” என்று முயல் சொன்னது
“இதோ நான் வந்து உன்னை பிடிக்கிறேன் பார்” என்றது நரி.
நரி ஒரே பாய்ச்சலில் பாய்ந்து முயலை பிடிக்க பார்த்தது. “கொர்... கொர்...”என்று குறைத்து கொண்டும், மோப்பம் பிடித்து கொண்டும் திரிந்தது.
“அட சே... இந்த முயலை தப்பிக்க விட்டு விட்டோமே!” என்று வருந்தியது நரி.



மூணாவது முயல் குட்டி விவரமாக யோசனை செய்து பொந்து கட்டுவதற்கு முடிவு செய்தது. இரவும் பகலும் பாராமல் பொந்தை நோண்டி முடித்தது. புல்லை வெட்டி கொண்டு வந்து மிருதுவான மெத்தை தனக்கு செய்து கொண்டது. சிறிது நாட்களிலேயே பொந்தை கட்டி முடித்தது. ஒரு நாள் வாசல் வழியே புல்வெளிக்கு வந்தது. மகிழ்ச்சியாக வெயிலில் விளையாடி கொண்டிருந்தது. அங்கிருக்கும் வேர்கள், தண்டு, செடி கொடிகள் எல்லாம் தின்று கொண்டிருந்தது.

யாரோ ஒருவர் அருகில் இருப்பதை உணர்ந்தது. பார்த்தால் பக்கத்திலேயே ஒரு நரி நின்று கொண்டிருந்தது. பசியில் இருந்த நரி “இந்த முயலை எப்படியாவது தின்றே ஆக  வேண்டும் என்று இருந்தது.”



“நரியிடம் இருந்து தப்பிக்க வேண்டும் என்றால் பொந்திற்குள் புகுவது தான் சரி” என்று குட்டி முயல் யோசித்தது. ஒளிவதற்கு அது கட்டிய பொந்தும் வாகாக இருந்தது.

“ஏய் முயல் குட்டி எவ்வளவு அழகான நாள் இது. வெளியே வா விளையாடலாம்” என்று தந்திர நரி முயலை அழைத்தது.

“முடிந்தால் என்னை பிடித்து தான் பாரேன்” என்று சிறித்து கொண்டே நரியிடம் சொல்லியது முயல்.

நரி பாய்ந்து பொந்திற்குள் நுழைய பார்த்தது. மோப்பம் பிடித்தது, கொர்..கொர்.. கொரென்று குறைத்தது. ஆனால் பொந்தில் முயல் இருக்கும் இடம் எட்டவே இல்லை.



பொந்தின் வாய் சிறியதாக இருந்ததால் நரி யின் மண்டை மாட்டி கொண்டது. மேலும் அதற்கு மேல் எவ்வளவு முயன்றும் நுழையவும் முடியவில்லை, வெளியே வரவும் முடியவில்லை.
"ஐயோ! என்னை காப்பாத்துங்க.. காப்பாத்துங்க.." என்று ஊளையிட்டது.
"ஐயோ பாவம் தான் நீங்க. என்னோட வயசுல பெரியவங்க கூட. ஆனா என்ன தெரியுமா யார் சொல்படியும் நான் இனி கேட்க தேவையில்லை. நான் சுயமாக எது சரி என்று எனக்கு தோன்றுகிறதோ அதையே செய்வேன். அதனால் உங்களை காப்பாற்ற என்னால் முடியாது."
"என்னை தின்பதற்காகவே நீங்க உங்க தலையை பொந்திற்குள் விட்டீர்கள். நீங்களே எடுத்து கொள்ளுங்கள்" என்று நரியிடம் கூறியது.
"என்னை மன்னிச்சிக்கோ..என்னை மன்னிச்சிக்கோ.. நான் உனக்கு என்ன வேணும்னாலும் கொடுக்கிறேன். என்னை காப்பாற்று" என்று கதறியது குள்ள நரி.
"சரி இனி என்னையும், என் சகோதரர்களையும் தொந்தரவு செய்ய மாட்டேன் என்று எனக்கு சத்தியம் பண்ணுங்க " என்றது முயல் ."ஒவ்.. ஒவ்.. சத்தியம் செய்யறேன்" என்னை இந்த பொந்திலிருந்து வெளியே விடு." என்று குலைத்தது நரி.



குள்ள நரி மூஞ்சியிலேயே முயல் குட்டி தன் காலால் ஒரு எத்து விட்டது. நரி தொபக்கடின்னு வெளியே வந்து விழுந்தது. உடம்பெல்லாம் மண் ஒட்டி கத்தி கத்தி களைத்த முகத்துடன் பார்க்கவே பாவமாக இருந்தது குள்ள நரி.



இப்போது முதல் இரண்டு முயல்களும் மூன்றாவது முயல் போலவே பாதுகாப்பான பொந்தை கட்டி கொண்டன. அதற்கு பிறகு மூன்று முயல்களும் சந்தோஷமாக விளையாடின.

ஆனால் குள்ள நரியின் புத்தி மாறுமோ ? அது கொஞ்ச நாட்களிலேயே முயல்களை மோப்பம் பிடித்து கொண்டு வந்தது.

இப்போதோ மூன்று முயல்களும் தங்களுடைய பொந்துகளில் பாதுகாப்பாக இருந்தன.

